உ

திருவண்ணாமலை

ஸ்ரீ ரமணமகரிஷிகள்

அருளிச்செய்த

உபதேச வுந்தியார்



# ஆன்மவித்தை.

15—12—1927.



உ

# *உபதேச வுந்தியார்.

## உபோற்காதம்.



1. தாரு வனத்திற் றவஞ்செய் திருந்தவர்
   பூருவ கன்மத்தா லுந்தீபற
   போனா ரறையென்ன வுந்தீபற.

2. கன்மத்தை யன்றிக் கடவு ளிலையென்னும்
   வன்மத்த ராயின ருந்தீபற
   வஞ்சச் செருக்காலென் றுந்தீபற.

.... ... ...

3. கன்ம பலந்தருங் கர்த்தற் பழித்துச்செய்
   கன்ம பலங்கண்டா ருந்தீபற
   கர்வ மகன்றாரென் றுந்தீபற.

4. இருடிக ளெல்லா மிறைவ னடியை
   வருடி வணங்கின ருந்தீபற
   வாழ்த்துகள் பாடின ருந்தீபற.

---

* இது பாரத்வாஜி, முகவைக் கண்ண முருகனா ரருளிய ரமணதேவ தோத்திரத் திருவுந்தியார்ப் பகுதியிற்றாருக வனத்திருடிகள் விடய கதாபாகந்தொக்க பகவானுபதேச பாகம்.

# உபதேசம்.



5. கன்மம் பயன்றரல் கர்த்தன தாணையாற்
கன்மங் கடவுளோ வுந்தீபற
கன்மஞ் சடமதா லுந்தீபற.

6. வினையின் விளைவு விளிவுற்று வித்தாய்
வினைக்கடல் வீழ்த்துமென் றுந்தீபற
வீடு தராதென வுந்தீபற.

7. கருத்தனுக் காக்குநிட் காமிய கன்மங்
கருத்தைத் திருத்தியஃ துந்தீபற
கதிவழி காட்டுமென் றுந்தீபற.

8. திடமிது பூசை செபமுந் தியான
முடல்வாக் குளத்தொழி லுந்தீபற
வுயர்வாகு மொன்றிலொன் றுந்தீபற.

9. எண்ணுரு யாவு மிறையுரு வாமென
வெண்ணி வழிபட லுந்தீபற
வீசனற் பூசையென் றுந்தீபற.

10. வழுத்தலில் வாக்குச்ச வாய்க்குட் செபத்தில்
விழுப்பமா மானத முந்தீபற
விளம்புந் தியானமி துந்தீபற.

11. விட்டுக் கருதலி னுறுநெய் வீழ்ச்சிபோல்
விட்டிடா துன்னலே யுந்தீபற
விசேடமா மென்னவே யுந்தீபற.

12. அணியபா வத்தி னவனக மாகு
மனனிய பாவமே யுந்தீபற
வணைத்தினு முத்தம முந்தீபற.

13. பாவ பலத்தினுற் பாவனு தீதசற்
பாவத் திருத்தலே யுந்தீபற
பரபத்தி யாகுமென் றுந்தீபற.

14. உதித்த விடத்தி லொடுங்கி யிருத்த
லதுகன்மம் பத்தியு முந்தீபற
வதுயோக ஞானமு முந்தீபற.

15. வளியுள் ளடக்க வலைபடு புட்போ
லுளமு மொடுங்குமென் றுந்தீபற
வொடுக்க வுபாயமி துந்தீபற.

16. உளமு முயிரு முணர்வுஞ் செயலு
முளவாங் கிளைகளென் றுந்தீபற
வொன்றுரு மூலமென் றுந்தீபற.

17. இலயமு நாச மிரண்டா மொடுக்க
மிலயித் துளதெழு முந்தீபற
வெழாதுரு மாய்ந்ததென் றுந்தீபற.

18. ஒடுக்க வளியை யொடுங்கு முளத்தை
விடுக்கவே யோர்வழி யுந்தீபற
வீயு மதனுரு வுந்தீபற.

19. மனவுரு மாயமெய்ம் மன்னுமா யோகி
தனக்கோர் செயலிலை யுந்தீபற
தன்னியல் சார்ந்தானென் றுந்தீபற.

20. வெளிவிட யங்களை விட்டு மனந்தன்
னொளியுரு வோர்தலே யுந்தீபற
வுண்மை யுணர்ச்சியென் றுந்தீபற.

21. மனத்தி னுருவை மறவா துசாவ
மனமென வொன்றிலை யுந்தீபற
மார்க்கநே ரார்க்குமி துந்தீபற.

22. எண்ணங்க ளேமனம் யாவினு நானெனு
மெண்ணமே மூலமா முந்தீபற
யானு மனமென லுந்தீபற

23. நானென் றெழுமிட மேதென நாடவுண்
ணான்றலை சாயுமென் றுந்தீபற
ஞானவி சாரமி துந்தீபற.

24. நானொன்று தானத்து நானானென் றொன்றது
தானாகத் தோன்றுமென் றுந்தீபற
தானது பூன்றமா முந்தீபற.

25. நானெனுஞ் சொற்பொரு ளாமது நாளுமே
நானற்ற தூக்கத்து முந்தீபற
நமதின்மை நீக்கத்தா லுந்தீபற.

26. உடல்பொறி யுள்ள முயிரிரு ளெல்லாஞ்
சடமசத் தானதா லுந்தீபற
சத்தான நானல்ல வுந்தீபற.

27. உள்ள துணர வுணர்வுவே றின்மையி
னுள்ள துணர்வாகு முந்தீபற
வுணர்வேநா மாகுமென் றுந்தீபற.

28. இருக்கு மியற்கையா லீசசீ வர்க
ளொருபொரு ளாவரென் றுந்தீபற
வுபாதி யுணர்வேவே றுந்தீபற.

29. தன்னை யுபாதிவிட் டோர்வது தானீசன்
றன்னை யுணர்வதா முந்தீபற
தானா மொளிர்வதா லுந்தீபற.

30. தானா யிருத்தலை தன்னை யறிதலாந்
தானிரண் டற்றதா லுந்தீபற
தன்மய நிட்டையீ துந்தீபற.

31. அறிவறி யாமையு மற்ற வறிவே
யறிவாகு முண்மையீ துந்தீபற
வறிவதற் கொன்றிலை யுந்தீபற.

32. தனாதியல் பாயிதனந் தான்றெரி கிற்பின்
னனாதி யனந்தமென் றுந்தீபற
வகண்ட சிதானந்த முந்தீபற.



33. பந்தவீ டற்ற பரசுக முற்றவா
றிந்த நிலைநிற்ற லுந்தீபற
விறைபணி நிற்றலென் றுந்தீபற.

34. யானற் றியல்வது தேரி னெதுவது
தானற் றவமென வுந்தீபற
தவத்தியல் சாற்றின னுந்தீபற.

## வாழ்த்து.

35. உற்றார்க் குறுதி யுபதேச வுந்தியார்
சொற்ற குருபர னுந்தீபற
சுமங்கள வேங்கட னுந்தீபற.

36. பல்லாண்டு பல்லாண்டு பற்பன்னூ றாயிரம்
பல்லாண்டு பல்லாண்டு முந்தீபற
பார்மிசை வாழியென் றுந்தீபற.

37. இசையெடுப் போருஞ் செவிமடுப் போரும்
வசையறத் தேர்வோரு முந்தீபற
வாழிபல் லூழியென் றுந்தீபற.

38. கற்கு மவர்களுங் கற்றுணர்ந் தாங்குத்தா
நிற்கு மவர்களு முந்தீபற
நீடுழி வாழியென் றுந்தீபற



உ

# ஆன்ம வித்தை.

## பல்லவி

ஐயே! யதிசுலபம்—ஆன்மவித்தை
ஐயே! யதிசுலபம்.

## அநுபல்லவி

நொய்யார் தமக்குமுளங் கையா மலகக்கனி
பொய்யா யொழியமிகு மெய்யாயுளதான்மா. (ஐயே!

## சரணங்கள்

1. மெய்யாய் நிரந்தரந்தா னையா திருந்திடவும்
பொய்யா முடம்புலக மெய்யா முளைத்தெழும் [பொய்
மையார் நினைவணுவு முய்யா தொடுக்கிடவே
மெய்யா ரிதயவெளி வெய்யோன் சுயமான்மா—
விளங்குமே; இருளடங்குமே; இடரொடுங்
குமே; இன்பம் பொங்குமே. (ஐயே!

2. ஊனு ருடலிதுவே நானு மெனுநினைவே
நானு நினைவுகள்சே ரோர்நா ரெனுமதனு

---

* பல்லவி யநுபல்லவி பாடின பாரத்வாஜி. முகவைக் கண்ண முருகனுர் பகவான் சரணங்களை வேண்டி யடைந்தனர்.

னா ரிடமெதென்றுட் போனா னினைவுகள்போய்
நானா னெனக்குகையுட் டானாய்த் திகழுமான்ம-
ஞானமே ; இதுவே மோனமே ; ஏகவானமே ;
இன்பத் தானமே. (ஐயே !

3. தன்னை யறிதலின்றிப் பின்னை யெதறிகிலென் ?
றன்னை யறிந்திடிற்பின் னென்னை யுளதறிய ?
பின்ன வுயிர்களில பின்ன விளக்கெனுமத்
தன்னைத் தனிலுணர மின்னுந் தனுளான்ம—
ப்ரகாசமே ; அருள்விலாசமே ; அகவிநாசமே ;
இன்ப விகாசமே. (ஐயே !

4. கன்மா திகட்டவிழ சென்மா திரட்டமெழ
வெம்மார்க் கமதனினு மிம்மார்க் கமிக்கெளிது
சொன்மா னததனுவின் கன்மா திசிறிதின்றிச்
சும்மா வமர்ந்திருக்க வம்மா வகத்திலான்ம—
சோதியே ; நிதானு பூதியே ; இராது பிதியே ;
இன்பாம் போதியே. (ஐயே !

5. விண்ணாதி யவிளக்குங் கண்ணாதி யபொறிக்குங்
கண்ணா மனக்கணுக்குங்கண்ணாய்மனவினுக்கும்
விண்ணா யொருபொருள்வே றெண்ணா திருந்தபடி
புண்ணா டுளத்தொளிரு மண்ணா மலையெனான்மா-
காணுமே ; அருளும வேணுமே; அன்பு பூணு
மே; இன்பு தோணுமே. (ஐயே !

## தனி

தேகம் கடநிகர் சடமிதற் ககமெனுந் திகழ்விலதால்
நாகம் சடலமி றுயிலினி றினமுறு நமதியலாற்
கோகம் கரனெவனுள னுணர்ந்துளருளக்குகையுள்ளே
சோகம் புரணவ ருணகிரி சிவவிபு சுயமொளிர்வான்.

# உபதேச வுந்தியார்.

## தலைப்புக்கவி



தாருகன் மத்தைக் கன்ம விருடி
கன்மம் வினைகருத் திடமெண் வழுவிட்
டணிபா வுதிவளி யுளமில வெடுக்க
மனவெளி மனத்தி னெண்ண நானென்
ஞனென் ஞனெனு முடலுள் ளிருதன்
ஞுனறி தஞுபந் தயானுற் பல்லிசை
கற்கு மு~~ந்தித் தலைப்புக் கவியே.~~
ப் பந்தெட் டுபதேச வுந்தியே